## அண்ணா வழியில்

# எம்.ஜி.ஆர். பதிவு செய்த

# திராவிட மதம்

டாக்டர் **மு. தெய்வநாயகம்** எம்.ஏ., பி.எச்.டி.



**திராவிட ஆன்மீக இயக்கம்,**
278, கொன்னூர் நெடுஞ்சாலை, அயன்புரம்,
சென்னை – 600 023. ☎ : 644 9032, 644 3842.

Web site : http://www.geocities.com//Athens/Ithaca/1412
Email : dravidasamayam@geocities.com

14.4.1999

விலை ரூ.2/-

# வாழ்த்து

"தந்தை பெரியார், தத்துவங்களை – கொள்கைகளை இந்த நாட்டிற்கு வழங்குவதற்காகவே வந்தார். அதை யாராவது நடைமுறைப்படுத்த வேண்டும். அண்ணாதான் நடைமுறைப் படுத்தினார்....... இதன் பரிணாம வளர்ச்சியாகப் புரட்சித்தலைவர், 'திராவிட மதம்' – 'திராவிட சமயம்' என்று எழுதிவிட்டார். எதிலே? சென்சஸ் கணக்கெடுப்பிலே.

அதற்குப் பிறகு அதைப் பற்றிய விரிவான பிரச்சாரத்திலோ, முயற்சியிலோ ஈடுபடவில்லை. அதைப் பல ஆண்டுகள் கழித்து இன்று நம் டாக்டர் மு. தெய்வநாயகம் தொடங்கியிருக்கிறார்.....

டாக்டர் மு. தெய்வநாயகம் 'திராவிட சமயம்' என்ற பெயரிலாவது தமிழரை – மனிதரை ஒன்று சேர்க்க முடியுமா? என முயற்சிக்கின்றார். அவருடைய முயற்சி வெற்றி பெற வேண்டும் என வாழ்த்துகின்றேன்".

மாண்புமிகு முன்னாள் அமைச்சர் **ஆர்.எம். வீரப்பன்**
(பெரியார், அண்ணா, எம்.ஜி.ஆர். ஆகிய
மூவருடனும் அதிக நெருக்கமாக இருந்தவர்)
**18.12.1998**

## 'அண்ணா வழியில் எம்.ஜி.ஆர்.'

### தமிழர் – திராவிடர்

சிந்துவெளி நாகரிகத்தின்படி தமிழர்களே இந்தியா முழுவதும் வாழ்ந்தவர்கள் என்பது வரலாறு. 'தமிழர்' என்ற சொல்லை உச்சரிக்க இயலாதவர்களால் அச்சொல் 'திராவிடர்' (தமிழர்–திரமிளர்–திரமிடர்–திரவிடர்–திராவிடர்) என்று உச்சரிக்கப்பட்டது. அதனால் உலகவரலாற்றில் 'திராவிடர்' என்ற பெயரே இனப்பெயராக இடம் பெற்றுள்ளது.

திராவிடர்கள் முன்னேற வேண்டும் என்ற நோக்கில் திராவிட முன்னேற்றக் கழகத்தை உருவாக்கியவர் அண்ணா.

திராவிடர்கள் முன்னேறவில்லையா?

ஆம். திராவிடர்கள் ஆரியர்களுக்கு (ஆரியர்கள் இந்தியாவுக்குப் பிழைக்க வந்தவர்கள்) அடிமையாக்கப் பட்டிருக்கிறார்கள். கீழ்சாதியாக்கப்பட்டிருக்கிறார்கள். ஆரியர்களின் பிடியிலிருந்து திராவிடர்களை விடுவிக்க வேண்டும் என்ற கொள்கையின் அடிப்படையில் பெரியார் வழியில் எழுந்த அண்ணா, தி.மு.க.வை உருவாக்கினார். அதை ஆட்சியைப் பிடிக்கும் அரசியல் கட்சி ஆக்கினார்.

### பெரியார் வழி என்ன?

*ஆரியர்கள் இந்து மதத்தைப் பயன்படுத்தி திராவிடர்களை அடிமைப்படுத்தி, இருக்கின்றார்கள். ஆகையால் இந்து மதக் கட்டுகளிலிருந்து திராவிடர்கள் விடுபடவேண்டும். இந்துமதம் கடவுள் நம்பிக்கையின் வழி திராவிடர்களை அடிமைப்படுத்தியிருக்கிறது. திராவிடர்களை அடிமைப்படுத்தும் கடவுள் திராவிடர்களின் எதிரி. ஆகவே பிள்ளையார் சிலையை உடை. இராமர் படத்தை*

*இழிவுபடுத்து. கடவுள் இல்லை என்று கூறு"*

என்றார் பெரியார். அதாவது இந்துமதத்தை ஆரியர்களிடம் விட்டுவிட்டு அதை விட்டு வெளியேறி விட வேண்டும் என்றார். இதே கொள்கையை அம்பேத்கார் வேறு விதமாகக் கூறினார்.

## அம்பேத்கார் வழி

*"என்னைப் பிறப்பிலேயே இழிவுபடுத்தும் மதம் இந்துமதம். நான் இந்துவாகப் பிறந்துவிட்டேன். இறக்கும்பொழுது இந்துவாக இறக்கமாட்டேன்"*

எனச் சபதம் எடுத்தார். தன்மானமுள்ள அவர் இந்து மதத்தை விட்டுப் புத்த மதத்திற்கு மதம் மாறினார். பெரியாரும் அம்பேத்காரும் திராவிட இனத்தில் பிறந்த தன்மானமுள்ளவர்கள்.

## திராவிட இனம் 88%

இந்திய மக்களில் 88% பேர் திராவிட இனத்தவர்கள். திராவிட மொழிகளைப் பேசும் திராவிடர்கள் தென் இந்தியர். திராவிட மொழிகளை மறந்த திராவிடர்கள் வட இந்தியர். திராவிடர்களை ஆரியப் பிராமணர்கள், சூத்திரர், பஞ்சமர் என்னும் இரண்டு பிரிவாகப் பிரித்திருக்கிறார்கள்.

## இந்துமத நம்பிக்கை

சூத்திரர்கள் – அடிமைகள். பஞ்சமர்கள் – தீண்டத் தகாதவர்கள். இந்தியாவிலுள்ள ஆரியர்களுக்கு அடிமைகளாகவும் தீண்டத்தகாதவர்களாகவும் வாழக் கடமைப்பட்டவர்களே இந்தியாவின் குடிமக்களாகிய திராவிடர்கள் என்பது ஆரியர்களின் இந்து மத நம்பிக்கையாயிருக்கிறது.

இதனாலேயே தன்மானமுள்ள பெரியாரும் அம்பேத்காரும் இந்து மதத்தை வெறுத்தார்கள். இந்து மதத்திலிருந்து விடுதலையடைய பெரியார் திராவிடர்களை நாத்திகராகச் சொன்னார்.

அம்பேத்கார் மதம் மாறச் சொன்னார். பெரியார் வழியில் வந்த அண்ணா ஒரு புதிய வழியைச் சொன்னார்.

**அண்ணா வழி**

*இந்து மதத்தை வெறுப்பதற்காக மதம் மாறவும் வேண்டாம். கடவுளை வெறுக்கவும் வேண்டாம். இந்து மதத்தைத் தவிர உலகில் வேறு மதங்கள் இல்லையா? அவற்றில் கடவுள் கொள்கை இல்லையா? நல்லனவற்றை எடுத்துக் கொள்ளுவோம். அல்லனவற்றை விட்டு விடுவோம். "ஒன்றே குலம், ஒருவனே தேவன்" என்னும் தமிழ் மந்திரத்தைப் பின்பற்றுவோம். பிராமணர்கள் இல்லாத திருமணச் சடங்கு, இறப்புச் சடங்குகளை நடத்துவோம்.*

என்று தி.மு.க.வை அரசியல் கட்சியாக உருவாக்கினார். தமிழக ஆட்சியைப் பிடித்தார். பிராமணர் இல்லாத சீர்திருத்தத் திருமணத்திற்கு அரசு அங்கீகாரம் கொடுக்கும் சட்டத்தை இயற்றினார்.

**எம்.ஜி.ஆர். வழி**

கடவுளை நம்பக் கூடாது என்ற பெரியார் நிலையிலிருந்து மாறினார் அண்ணா. கடவுளை நம்பலாம். அது, "கடவுள் ஒருவரே என்ற தெளிவும் உலக மக்கள் யாவரும் பிறப்பில் ஏற்றத் தாழ்வு இல்லாத ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள் என்ற ஒத்த உணர்வும், உலகப் பெரும் மதங்கள் யாவும் இந்த உண்மையைக் கூறுகின்றன என்ற பரந்த அறிவும் உள்ளதாக இருக்க வேண்டும்" என்ற வழியைக் காட்டினார் அண்ணா. ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற கொள்கையையுடைய கிறிஸ்தவம், இஸ்லாம் போன்ற மற்ற மதங்களையும் அணைத்துக் கொண்டார். அந்த வழியில் வந்த எம்.ஜி.ஆர். அண்ணா காட்டிய அந்த வழிக்கு 'திராவிட மதம்' என்று பெயரிட்டார். 1981இல் மக்கள் தொகை கணக்கெடுக்கும்

பொழுது தம்முடைய மதம் 'திராவிட மதம்' என்று அப்பெயரைப் பதிவும் செய்தார். ஏன் அதற்குத் 'திராவிட மதம்' என்ற பெயரைக் கொடுத்தார் என்பதை எண்ணிப் பார்ப்போம்.

## சிவலிங்க வழிபாடு – உலகப் பொதுமதம் – திராவிட மதம்

உலகப் பெரும் மதங்கள் எல்லாம் திராவிடர்களின் சிந்துவெளி வழிபாடான சிவலிங்க வழிபாட்டிலிருந்தே வளர்ந்துள்ளன. உலக மதங்களில் அதிக மக்களால் பின்பற்றப்படும் கிறிஸ்தவர்களின் புனித நூலான பைபிளுக்கு அடிப்படை சிவலிங்க வழிபாடு என்பது நிலைநாட்டப்பட்டுள்ளது. சிவலிங்க வழிபாட்டிலிருந்தே சைவ வைணவ சமயங்கள் (இந்துமதம்) உருவாகியுள்ளன. திராவிடர்களின் புனிதமான சிவலிங்கத்திற்கு இழிவான பொருள் கூறியவர்கள் இந்திய ஆரியர்கள். இஸ்லாமியர்களின் ஒரே கோயில் இருக்குமிடம் மக்கா நகரம். அங்கும் 'காபா'வில் திராவிடர்களின் சிவலிங்கமே வழிபடப்படுகிறது. திராவிடர்களின் இனம் திராவிட இனம், திராவிடர்களின் மொழி திராவிட மொழி என்பதைப் போன்று திராவிடர்களிடமிருந்து உருவான மதங்களுக்கு மொத்தப் பெயர் 'திராவிட மதம்' என்பதாகும். உலக மதங்களை எல்லாம் ஒன்று சேர்த்து அவற்றிற்கு ஒரு பொதுப் பெயர் கொடுக்க வேண்டுமானால் 'திராவிட மதம்' என்ற பெயரே வரலாற்று வழியில் பொருத்தமாக அமைகிறது.

## திராவிட சமயக் கோயில்களில் என்ன வேலை?

மதம் வேறு, வழிபாடு வேறு. ஆரியர்களுக்கு மதம் கிடையாது. அவர்கள் சூரியன், தீ முதலிய இயற்கையையே வழிபட்டு வந்தார்கள். திராவிடர் கோவில்களில் பூசை செய்யும் பிராமணர்கள், தங்களுடைய திருமணம் போன்ற நிகழ்ச்சிகளில் தீயையே இன்றும் வணங்கி வருகின்றார்கள். அவர்களுக்குக் கடவுளைத் தெரியாது. தீயை வணங்குகிறவர்களுக்கு, திராவிட

சமயக் கடவுள் கோயில்களில் என்ன வேலை? என்ற கேள்வியைக் கேட்டால் அவர்கள் எப்பொழுது சைவம், வைணவம் போன்ற இந்திய திராவிட மதங்களையும் திராவிட மதக் கோவில்களையும், ஆரிய அரசியல் அதிகாரத்தால் அடிமைப்படுத்தினார்கள் என்னும் வரலாற்று உண்மை கிடைக்கும். திராவிடக் கோவில்களில் ஆரிய பிராமணர்களைப் பூசை செய்ய அனுமதித்தால் திராவிட மக்களுக்கும் திராவிட ஆட்சியாளர்களுக்கும் தீங்கு ஏற்படும் என்று திருமந்திரம் கூறுகிறது.

## இந்து மதம் –– இந்துத்துவம் = திராவிட மதம்

இந்திய திராவிடர்களுக்கு எதிரான இந்திய ஆரியர்களின் அரசியல் கொள்கைக்கு 'இந்துத்துவம்' என்பது பெயர். 'இந்துத்துவம்' என்பது மதம் அன்று. அது (ஆரியர்களின்) வாழ்க்கை முறை என உச்சநீதி மன்றம் தீர்ப்பளித்துள்ளது. **நரியின் வாழ்க்கைமுறை** வேறு. **பசுவின் வாழ்க்கைமுறை** வேறு. இரண்டும் ஒன்றன்று. ஆரியர்களின் வாழ்க்கைமுறை வேறு. திராவிடர்களின் வாழ்க்கைமுறை வேறு. இந்துத்துவக் கொள்கையில் கடவுள் நம்பிக்கை இல்லை என்று பிரதமர் வாஜ்பேயி தெரிவித்துள்ளார். ஆகவே 'இந்துத்துவம்' என்பது மதத்தைக் குறிப்பது அன்று. இந்திய திராவிடர்களை இழிவுபடுத்தும் இந்திய ஆரிய அரசியல் கொள்கையின் அடிப்படையில் வாழும் ஆரிய வாழ்க்கை முறைக்கே 'இந்துத்துவம்' என்பது பெயராகும்.

ஆனால் 'இந்து மதம்' என்பது வெறும் வாழ்க்கை முறை அன்று. அதைத் தாண்டி ஆன்மீகத்தைக் கூறும் கடவுள் நம்பிக்கையுள்ள உலகப்பெரும் மதங்களில் இந்துமதமும் ஒன்றாகும்.

**ஆகவே, 'இந்துத்துவம்' என்பது வேறு; 'இந்து மதம்' என்பது வேறு.**

'இந்து மதம்' என்பது உண்மை இந்தியர்களாகிய திராவிடர்களின் மதம் ஆகும். உண்மை இந்தியர்களாகிய திராவிடர்களின் மதத்தை ஆரியப் பிராமணர்கள் அடிமைப்படுத்தி அதில் இந்திய ஆரியர்களின் இந்துத்துவக் கொள்கையாகிய சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையைக் கலந்து விட்டார்கள். **இந்து மதம் கெடுக்கப்பட்டுவிட்டது.**

## சிறுபான்மை பெரும்பான்மையை அடிமைப்படுத்தியுள்ளது

'இந்துத்துவம்' என்பது இந்திய ஆரியர்களின் அரசியல் கொள்கை ; 'இந்துமதம்' என்பது இந்திய திராவிடர்களின் ஆன்மீகக்கொள்கை. இன்றைய இந்து மதத்திலிருந்து ஆரிய இந்துத்துவத்தை நீக்கிவிட்டால் அது உண்மை இந்தியர்களாகிய திராவிடர்களின் மதமாக மாறிவிடுகிறது. திராவிட மதத்தில் ஆரிய இந்துத்துவத்தைக் கலந்தால் அது சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையையுடைய இன்றைய கெடுக்கப்பட்ட இந்துமதமாக மாறி விடுகிறது. கெடுக்கப்பட்ட இந்து மதத்தைப் பயன்படுத்தி சிறுபான்மையினராகிய ஆரியர்கள் பெரும்பான்மையினராகிய திராவிடர்களை அடிமைப்படுத்தியுள்ளனர்.

## நீக்கியாகவேண்டியதிருக்கிறது

ஆகவே, 'இந்துமதம்' என்ற பெயர் திராவிடர்களை அடிமைப்படுத்த ஆரியர்களுக்குப் பயன்படும் பெயராக மாறிவிட்டது. திராவிடர்களை இழிவுபடுத்தும் பெயராக ஆகிவிட்டது. எனவே, திராவிடர்கள் 'இந்துமதம்' என்ற பெயரை நீக்கி ஆக வேண்டியதிருக்கிறது.

## கீழ்சாதி

ஆகவே, இந்திய மக்கள் தொகையில் 88% இருக்கும் திராவிடர்களில் ஒருவர், இன்று தம்முடைய மதத்தின் பெயரை **'இந்து மதம்' என்று குறிப்பிட்டால்** ஆரிய சாதி ஏற்றத்தாழ்வுக்

கொள்கையை அவர் ஏற்றுக் கொண்டவராகி சூத்திரர் அல்லது பஞ்சமராக மாறி **கீழ்சாதி ஆகிவிடுகிறார்.**

**தன்மானம்**

அவர் தம்முடைய மதத்தின் பெயரை '**திராவிட மதம்**' **என்று குறிப்பிட்டால்**, ஆரிய அரசியல் கொள்கையாகிய சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையிலிருந்தும் **கீழ்சாதி நிலையிலிருந்தும் விடுபட்டு தன்மானமுள்ளவராக ஆகிவிடுகிறார்.** அதன் பின்பு அவரை யாரும் அடிமை (சூத்திரர்) என்றோ, தீண்டத்தகாதவர் (பஞ்சமர்) என்றோ கூட்ட முடியாது. ஏனென்றால் திராவிடர் மதத்தில் ஆரிய சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையாகிய ஆரிய அரசியல் கொள்கைக்கு இடமில்லை.

**விடுவிக்கும் வழி**

திராவிடர்களை இழிவுபடுத்தும் ஆரிய அரசியல் கொள்கையாகிய இந்துத்துவக் கொள்கையையுடைய பிராமணர்களின் பிடியிலிருந்து இந்திய மதமாகிய திராவிட மதத்தை விடுவிக்கும் வழி திராவிடர்கள் தங்கள் மத வரலாற்றை உணருவதும் தங்கள் மதம் திராவிட மதம் என்பதை அறிந்து பதிவு செய்வதும் தங்களுடைய மதச் சடங்குகளைத் தாங்களே நடத்திக் கொள்வதும் ஆகும்.

**திராவிட இனம் ஒரு தெய்வீக இனம்**

திராவிடர்கள் தங்கள் சொந்த மத வரலாற்றை உணருவதற்கு அவர்களுடைய சொந்த இனவரலாற்றை அவர்கள் நன்கு அறிய வேண்டியது அவசியமாகிறது. திராவிட இனம் ஒரு தெய்வீக இனமாகும். திராவிட இனத்திலிருந்தே உலகப்பெரும் மதங்கள் எல்லாம் உருவாகியுள்ளன என்பதைப் பார்த்தோம். 'தென்னாடுடைய சிவனே போற்றி, எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்பதும் 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்பதும் வேறு வேறானவை அல்ல.

இரண்டும் ஒன்றேயாகும். உலக மதங்கள் எல்லாம் திராவிட மதத்தின் 'கிளைகள்' ஆகும். இந்த வரலாற்று உண்மையை உணர்ந்தவர்கள் மதவெறியிலிருந்து விடுதலை பெற்று உலகளாவிய ஆன்மீக உண்மைகளை நன்கு புரிந்து கொண்டு வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் சிறப்பை அடைவார்கள்.

## அடிமைத்தளையிலிருந்து ஆன்மீக விடுதலைக்கு

தங்கள் இனவரலாற்றைச் சரியாகப் புரிந்து கொண்ட திராவிடர்கள், பிறப்பால் தாங்கள் கீழானவர்கள் என்ற தாழ்வு மனப்பான்மையிலிருந்து விடுதலையடைவார்கள். இந்த விடுதலை, அவர்களுடைய ஆன்மீக விடுதலைக்கு வழி நடத்தும். ஆன்மீக விடுதலை பெற்றவர்கள் மற்றவர்களுக்கு அடிமையாயிருக்கமாட்டார்கள். தங்களுடைய கோவிலில் தாங்களே பூசை செய்வார்கள். தங்களுடைய திருமணம், பிறப்பு, இறப்பு முதலிய சடங்குகளைத் தாங்களே செய்து கொள்வார்கள். அடிமைத்தளையை முற்றிலும் அகற்றி விடுவார்கள்.

## பிராமணீயத்தை நீக்கிய இந்து மதமே திராவிட மதம்

பிராமணரை வெறுத்தார் பெரியார். பிராமணீயத்தை வெறுத்தார் அண்ணா. பிராமணீயம் என்பது சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையையுடைய ஆரிய அரசியல் கொள்கை என்பதையும் அதுவே இந்துத்துவம் என்பதையும் பார்த்தோம். பிராமணீயத்தை நீக்கிய இந்து மதமே திராவிட மதம் என்பதையும் அதுவே தன்மானமுள்ள உண்மை இந்தியர்களாகிய திராவிடர்களின் மதம் என்பதையும் பார்த்தோம்.

## எம்.ஜி.ஆர். வழியில்

ஆகவே, இந்திய ஆரிய அரசியல் கொள்கையாகிய இந்துத்துவமாம் பிராமணீயம் நீக்கப்பட்ட இந்து மதத்திற்குத் 'திராவிட மதம்' என்று பெயரிட்டார் எம்.ஜி.ஆர். அதை 1981இல் பதிவும் செய்தார். இந்து மதமாகிய திராவிட மதத்தைப் பதிவு

செய்த தன்மானமுள்ள எம்.ஜி.ஆர். வழியில் அரசியல்வாதிகளாக இருப்பவர்கள் தங்கள் மதம் 'திராவிட மதம்' என்று பதிவு செய்ய வேண்டுமல்லவா?

### அண்ணா வழியில்

அவ்வாறே, பிராமணீயத்தை எதிர்த்த தன்மானமுள்ள அண்ணாவின் வழியில் அரசியல்வாதிகளாக இருப்பவர்கள் பிராமணீயம் நீக்கப்பட்ட இந்து மதமாகிய திராவிட மதமே தங்கள் மதம் என்று பதிவு செய்ய முன்வரவேண்டுமல்லவா?

### பெரியார் வழியில்

அவ்வாறே, பிராமணர்களையும் இந்து மதத்தையும் எதிர்த்த தன்மானமுள்ள பெரியாரின் வழியில் அரசியல்வாதிகளாகவும் சமூக சீர்த்திருத்தக்காரர்களாகவும், இருப்பவர்கள் தங்கள் மதத்தின் பெயரை 'இந்துமதம்' என்று கூறக் கூடாதல்லவா?

### அம்பேத்கார் வழியில்

அவ்வாறே, இந்து மதத்தை வெறுத்த தன்மானமுள்ள அம்பேத்காரின் வழியில் அரசியல் மற்றும் சமுதாயவாதிகளாக இருப்பவர்கள் தங்கள் மதத்தின் பெயரை 'இந்துமதம்' என்று சொல்லக்கூடாதல்லவா?

### உண்மைத் தொண்டர்கள்

தன்மானமுள்ளவர்களாகிய அம்பேத்கார், பெரியார், அண்ணா, எம்.ஜி.ஆர். இவர்களுடைய உண்மைத் தொண்டர்கள் தங்கள் மதத்தின் பெயரை 'இந்துமதம்' என்று குறிப்பிடமாட்டார்கள். பிராமணர்களிடம் அடிமைகளாக இருக்கவும் மாட்டார்கள்.

### கெடுக்கப்பட்டு விட்ட பெயர்

'பிராமணர்' – என்பது ஒரு சாதியின் பெயர் அன்று. அது ஒரு கொள்கையாளர்களின் பெயர். (சிவன்—சைவர்; விஷ்ணு—வைணவர்;

பிரமன்–பிராமணர்). நல்ல பொருளுடன் உருவாக்கப்பட்ட அப்பெயர் வேற்றவர்களின் தீய நோக்கத்தால் அபகரிக்கப்பட்டு, மற்றவர்களை அடிமைப்படுத்தப் பயன்படுத்தப்பட்டு அதன் உண்மைப் பொருள் கெடுக்கப்பட்டு விட்டது. கெடுக்கப்பட்ட அப்பெயர் சாதியாக ஆக்கப்பட்டுவிட்டது. இப்பொழுது அப்பெயர் கொள்கையைச் சொல்லி ஏமாற்றும் சாதியைக் குறிக்கிறது.

## துரோகப் பரம்பரை – தியாகப் பரம்பரை

சிலர் இத்தனையையும் புரிந்த பின்னரும் தன்மானத்தை யிழந்து 'கீழ்சாதி' என்ற இழிவு தரும் 'இந்து மதம்' என்று குறிப்பிட ஏன் விரும்புகின்றார்கள்? என்ற கேள்வி எழுகின்றது. திராவிட இனம் மொத்தத்தில் 'கீழ்சாதி இனம்' என்று இகழப்பட்டதுடன் திராவிடர்களுக்கு மத்தியிலும் மேல்சாதி, கீழ்சாதி என்ற பல்வேறு நிலையில் பிரிவுகள் உருவாக்கப்பட்டுள்ளன. திராவிடர் களிடையே இனத்தை, மொழியை, பண்பாட்டை, ஆன்மீகத்தை வேற்றவர்களுக்குக் காட்டிக் கொடுத்து வேற்றவர்களுக்கு அடிமைப்படுத்திய பரம்பரையினர், பிராமணர்களால் பாராட்டப்பட்டு, மேல்சாதிப் பட்டம் பெற்றுள்ளனர். காட்டிக் கொடுத்த அளவுக்கு மேல்சாதி நிலையும் எதிர்த்த அளவுக்குக் கீழ்சாதி நிலையும் கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே, திராவிடர்களில் துரோகப் பரம்பரையினர் மேல்சாதியினர் தியாகப் பரம்பரையினர் கீழ்சாதியினர் என்பது வரலாறு.

## விடுவிக்க முயலுவோம்

இனத்தைக் காட்டிக் கொடுத்து இனத் துரோகத்தால் பெற்ற பட்டத்தை, உயர்வை, இழக்க விரும்பாதவர்களும் மக்களை ஏமாற்றி அதிகாரத்தைப் பிடிப்பதற்காக பெரியார், அண்ணா, எம்.ஜி.ஆர்., அம்பேத்கார் பெயரால் ஏமாற்று அரசியல் பண்ணுகின்றவர்களும் 'திராவிட மதம்' என்று குறிக்காமல் 'இந்து மதம்' என்று குறிக்கத்தானே விரும்புவார்கள். காட்டிக்

கொடுப்பதுடன் அடிமைகளாய் இருப்பதில் சுகம் காணும் இவர்களையும் விடுவிக்க முயலுவோம்.

**வகுப்புகள்**

அடிமையாயிருப்பதில் சுகம் காணுவதை விடுத்து விடுதலையை நோக்கி நடக்க விரும்பும் தன்மானமுள்ள திராவிடர்களுக்காக வகுப்புகள் நடத்தப்படுகின்றன. திராவிட இன திராவிட மத ஆராய்ச்சியில் தேறிய பல்கலைக் கழக ஆராய்ச்சி அறிஞர்கள் வகுப்புகளை நடத்துகிறார்கள்.

**ஆன்மீக விளக்கக் கூட்டங்கள்**

உடல், உயிர், ஆன்மா, கடவுள் ஆகிய நான்கு பற்றியும் தெளிவான விளக்கம் மனிதராகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் தேவைப்படுகிறது. ஆன்மாவுக்கும் உயிருக்கும் உள்ள வேறுபாடு தெரியாதவர்கள் மதத்தின் பெயரால் அடிமை களாக்கப்படுகின்றார்கள். அரசியல், மதம், ஆன்மீகம் ஆகிய மூன்றுக்கும் உள்ள வேறுபாடுகள் பற்றியும், மதவெறியிலிருந்து விடுதலை பெற்று ஆன்மீக வளர்ச்சி பெறுவது பற்றியும், உடல், உயிர், ஆன்மா, கடவுள் ஆகிய நான்கு பற்றியும், ஆன்மீக **விளக்கக் கூட்ங்கள்** நடைபெற இருக்கின்றன. 1999 மே 30 முதல் **ஒவ்வொரு மாதமும் கடைசி ஞாயிறு மாலை 6.00க்கு** திராவிட ஆன்மீக இயக்க முகவரியில் ஆன்மீக விளக்கக் கூட்டம் நடைபெறும். ஆன்மீக விடுதலையும், ஆன்மீக அமைதியும், ஆன்மீக வளர்ச்சியும், பெற விரும்பும் ஆன்மீக அன்பர்கள் அனைவரும் பங்கு கொள்ளலாம்.

உங்களை அன்புடன் அழைக்கும்

**திராவிட ஆன்மீக இயக்கம்,**

278, கொன்னூர் நெடுஞ்சாலை, அயன்புரம், சென்னை – 600 023.
☎ : 644 9032 644 3842.

(திருப்புக)

# திராவிட சமய இறைவேண்டல்

தென்னாடுடைய சிவனே போற்றி!
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!

அன்பின் உருவாக விளங்கும் எங்கள் இறைவா,
செந்தமிழில் உன் பெயர் சிவன் என்பது!
எபிரேய மொழியில் நீ எகோவா ஆனாய்!
அரபு மொழியில் உன்னை அல்லா என்பர்!

உன் அருள் சக்தியை,
அம்மை என்பர் சைவர்,
விஷ்ணு என்பர் வைணவர்,
பரிசுத்த ஆவி என்பர் கிறிஸ்தவர்,
ரூகுல்லா என்பர் இஸ்லாமியர்,

உன் அருள் நிறை மொழியின் உருவை,
வார்த்தை என்பர் யூதர்!
கலிமத்துல்லா என்பர் இஸ்லாமியர்!
இயேசு என்பர் கிறிஸ்தவர்!
குமரக்கடவுள், பிள்ளையார் என்பர் சைவர்!
பிரமன், ஐயப்பன் என்பர் வைணவர்!

பல மதங்களில், பல மொழிகளால், பல பெயர்களில், பல ஒலிகளால், பல கோணங்களில் நீ போற்றி வணங்கப் பட்டாலும் நீ பலர் அல்லன், நீ ஒருவனே! உன்னால் படைக்கப்பட்ட மனிதர்களாகிய நாங்கள் ஒரே குலத்தைச் சேர்ந்தவர்களே!

**ஒன்றே குலம்; ஒருவனே தேவன்!**

என்னும் இந்த ஆன்மீக உண்மையைத் திராவிட சமய வரலாற்று வழியில் நாங்கள் நன்கு உணர்ந்து கொள்ள எங்களுக்கு அருள் புரியுமாறு உன் திருவடி தொழுது வேண்டுகின்றோம்!

# பின் குறிப்பு

1) எம்.ஜி.ஆர். தம்முடைய மதம் 'திராவிட மதம்' என்று பதிவு செய்த ஒன்றுக்காகவே, அவர் இறந்தபோது அவருடைய சமாதிக்கருகே தவத்திரு குன்றக்குடி அடிகளார், பேராயர் டாக்டர் அருளப்பா, சகோதரர் D.G.S.தினகரன், திரு. வலம்புரி ஜான், ஜனாப் அசன் குத்தூஸ், டாக்டர் தெய்வநாயகிஜோதி இவர்களை அழைத்து டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் தலைமையில் சர்வ சமயப் பிரார்த்தனையை, திராவிட சமய ஆய்வு இயக்கம் நடத்தியது இங்கு குறிப்பிடத்தக்கது.

2) 'அண்ணா வழியில் எம்.ஜி.ஆர்.' – ஆன்மீக விடுதலைக் கூட்டங்களின் தொடக்கவிழா 18.12.'98இல் சென்னை கலைவாணர் அரங்கத்தில் திராவிட ஆன்மீக இயக்க நிறுவனரான டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. எம்.ஜி.ஆர். அமைச்சரவையில் பங்கேற்றிருந்த மாண்புமிகு முன்னாள் அமைச்சர்களான ஆர். எம். வீரப்பன், திருநாவுக்கரசு, க. இராஜாராம், ஆனூர் ஜெகதீசன் சிறப்புரை வழங்கினார்கள். திருவாவடுதுறை ஆதீன முத்துக்குமாரசாமி தம்பிரான் சுவாமிகளும் தமிழ்நாடு சிறுபான்மை ஆணையத்தின் தலைவர் பேராயர் எஸ்றா சற்குணம் அவர்களும் வாழ்த்துரை வழங்கினார்கள்.

3) **திராவிட மத உலகளாவிய மாநாட்டுக்குக்கான ஆயத்தங்கள் நடைபெற்று வருகின்றன.**

4) திராவிட மதம் பற்றி விரிவான ஆராய்ச்சி நூல்கள் வெளிவந்துள்ளன. திராவிட சமயம் – செய்திமடல் வெளிவந்து கொண்டிருக்கிறது. விருப்பமுடையவர்கள் தொடர்பு கொள்ளலாம்.

## எங்களிடம் கிடைக்கும் நூல்கள்

1) கடவுள் உண்டா – I
2) புற ஒளியும் அக ஒளியும் – II
3) God in Thirukkural
4) சிவஞானபோதம்
5) ஆதி அடைக்கலம் காத்த அம்மன் வரலாறு
6) திருக்குறள் புத்தாய்வு
7) விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் – ஒப்பாய்வு
8) தமிழ் பக்தி இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் (விவிலிய ஒளியில்)
9) Thirukkural and its central thought
10) 108 Questions to Sankara Mutt?
11) சங்கரமடத்திற்கு 108 கேள்விகள்
12) சங்கரமடத்தோடு போராட வேண்டியது ஏன்?
13) Christianity in Hinduism?
14) திராவிட சமய இதழ்கள் – தொகுப்பு

திராவிட ஆன்மீக இயக்கம், 278, கொன்னூர் நெடுஞ்சாலை,
அயன்புரம், சென்னை – 600 023. ☎ : 644 9032 644 3842.